# ॥ नवरत्नमालिका ॥

## நவரத்னமாலிகா

(1)

हारनूपुरकिरीटकुण्डलविभूषितावयवशोभिनीं
कारणेशवरमौलिकोटिपरिकल्प्यमानपदपीठिकाम् ।
कालकालफणिपाशबाणधनुरंकुशामरुणमेखलां
फालभूतिलकलोचनां मनसि भावयामि परदेवताम् ॥

ஹார நூபுர கிரீட குண்டல விபூஷிதாவயவசோபினீம்
காரணேச்வரமௌலி கோடி பரிகல்ப்யமான
பதபீடிகாம் ।
காலகாலபணி பாச பாணதனு ரங்குசாமருணமேகலாம்
பாலபூதிலக லோசனாம் மனஸி பாவயாமி
பரதேவதாம் ॥

ஹாரம், கால்சதங்கை, கிரீடம், குண்டலம், இவற்றால் அலங்கரிக்கப்பட்ட அவயவங்களால் அழகாக இருப்பவளும், பிரம்மா முதலிய காரணதேவதைகளின் தலைமுனைகள் சேர்ந்து ஏற்படுத்திய பாதபீடத்தையுடையவளும், மிகக் கரிய நாகங்கள், பாசம், பாணம், வில், அங்குசம் இவற்றுடன் கூடியவளும், சிவந்த மேகலையணிந்தவளும், நெற்றியில் இட்ட திலகமாகிய கண்ணையுடையவளுமான பரதேவதையை மனதில் த்யானிக்கிறேன்.

(2)

गन्धसारघनसारचारुनवनागवल्लिरसवासिनीं
सान्ध्यरागमधुराधराभरणसुन्दराननशुचिस्मिताम् ।
मन्थरायतविलोचनाममलबालचन्द्रकृतशेखरां
इन्दिरारमणसोदरीं मनसि भावयामि परदेवताम् ॥

கந்தஸார கனஸார சாருநவ நாகவல்லி ரஸ வாஸினீம்
ஸாந்த்ய ராகமதுரா தராபரண ஸுந்தராநந
சுசிஸ்மிதாம் ।
மந்தராயதவிலோசனா மமலபாலசந்த்ரக்ருதசேகராம்
இந்திராரமண ஸோதரீம் மனஸிபாவயாமி
பரதேவதாம் ॥

வாசனை பொருந்திய கற்பூரம் அழகிய புது வெற்றிலை இவற்றின் சாறு சுவைத்து நறுமணம் கொண்டவளும், மாலைச் செம்மானம் போல் அழகிய உதட்டுச் சாயமும், தூய புன்முறுவலும் கொண்ட முகத்தையுடையவளும், சற்றே சோம்பிய நீண்ட கண்களையுடையவளும், நிர்மல பிறை சந்திரனையணிந்தவளும், லக்ஷ்மீபதியான நாராயணனின் சகோதரியுமான பரதேவதையை மனதில் தியானிக்கிறேன்.

(3)

स्मरचारुमुखमण्डलां विमलगण्डलम्बिमणिमण्डलां
हारदामपरिशोभमानकुचभारभीरुतनुमध्यमाम् ।
वीरगर्वहरनूपुरां विविधकारणेशवरपीठिकां
मारवैरिसहचारिणीं मनसि भावयामि परदेवताम् ॥

ஸ்மேரசாரு முகமண்டலாம் விமலகண்டலம்பி
மணிமண்டலாம்
ஹாரதாம பரிசோபமான குசபார பீருதனுமத்யமாம்।
வீரகர்வ ஹரநூபுராம் விவித காரணேச வரபீடிகாம்
மாரவைரிஸஹ சாரிணீம் மனஸிபாவயாமி
பரதேவதாம் ॥

மன்மதனின் பகைவரான பரமேச்வரன் மனைவியான பரதேவதையை மனதில் தியானிக்கிறேன். அவள், புன்முறுவல் பூத்த அழகிய முகமண்டலம் கொண்டவள், சுத்தமான கன்னத்தின் கீழே தொங்கும் மணிக்காதோலையுடையவளும்,

ஹார வரிசைகள் அழகுறச் செய்த ஸ்தனபாரத்தினால் பயந்ததுபோல மிகக் குறுகிய இடையுடையவளும், வீரர்களுக்கே கர்வத்தைப் போக்கும் காற் சதங்கை கொண்டவளும், பிற்கால காரணேசர்களால் தாங்கப்படும் ஆஸசனமுடையவளாயும் திகழ்கிறாள் அவ்வம்பிகை.

(4)

भूरिभारधरकुण्डलीन्द्रमणिबद्धभूवलयपीठिकां
वारिराशिमणिमेखलावलयवह्निमण्डलशरीरिणीम् ।
वारिसारवहकुण्डलां गगनशेखरीं च परमात्मिकां
चारुचन्द्ररविलोचनां मनसि भावयामि परदेवताम् ॥

பூரிபாரதரகுண்டலீந்த்ரமணிபத்த பூவலய பீடிகாம்
வாரராசி மணிமேகலாவலய வஹ்நிமண்டல
சரீரிணீம் ।
வாரிஸார வஹகுண்டலாம் ககனசேகரீம் ச பரமாத்மிகாம்
சாருசந்த்ர விலோசனாம் மனஸி பாவயாமி
பரதேவதாம் ॥

மிகுந்த பாரத்தை தாங்கும் ஆதிசேஷன் மூலம் கிடைத்த மணிகள் பதித்த பூவலயமாகிய பீடத்தையுடையவளும், சமுத்திரத்திலிருந்து கிடைத்த மணிகளாலான மேகலைச் சுற்றிய தீ மண்டலமோவென்ற சரீரத்தையுடையவளும், மேகங்களாகிய குண்டலமும், ஆகாயமாகிய தலையும் கொண்டு பரம்பொருளால், அழகிய சந்திரன், சூர்யர்களாகிய கண்களும் உடைய பரதேவதையை மனதில் தியானிக்கிறேன்.

(5)

कुण्डलत्रिविधकोणमण्डलविहारषड्दलसमुल्लस –
त्पुण्डरीकमुखभेदिनीं तरुणचण्डभानुतडिदुज्ज्वलाम् ।
मण्डलेन्दुपरिवाहितामृततरङ्गिणीमरुणरूपिणीं
मण्डलान्तमणि दीपिकां मनसि भावयामि परदेवताम् ॥

குண்டலத்ரிவித கோண மண்டல விஹார ஷட்தல
ஸமுல்லஸத்
புண்டரீக முகபேதினீம் தருணகண்டபானு தடிது
ஜ்வலாம் ।
மண்டலேந்து பரிவாஹிதாம் ருததரங்கிணீ
மருணரூபிணீம்
மண்டலாந்தமணி தீபிகாம் மனஸி பாவயாமி
பரதேவதாம் ॥

பிந்து, த்ரிகோணம், ஷட்கோணம், நவகோணம் இவற்றிலின்றி ஆறுதலங்களிலும் இருந்து கொண்டு சூர்யன், மின்னல் இவை போல் பிரகாசிப்பவளும், பூர்ண சந்திரனிலிருந்து பெருகி ஓடும் அம்ருத நதியாக இருப்பவளும், செந்நிறமானவளும், வட்டத்தில் அமைந்த மணிதீபம் போன்றிருப்பவளுமான பரதேவதையை தியானிக்கிறேன்.

(6)

वारणाननमयूरवाहमुखाहवारणपयोधरां
चारणादिसुरसुन्दरीचिकुरशेखरीकृतपदाम्बुजाम् ।
कारणाधिपतिपञ्चकप्रकृतिकारणप्रथममातृकां
वारणान्तमुखपारणां मनसि भावयामि परदेवताम् ॥

வாரணாநத மயூரவாஹ முகாஹ வாரணபயோதராம்
சாரணாதிஸுரஸுந்தரீசிகுரகேசரீக்ருதபதாம்
புஜாம் ।
காரணாதிபதிபஞ்சக ப்ரக்ருதி காரண ப்ரதம மாத்ருகாம்
வாரணாந்த முகபாரணாம் மனஸிபாவயே
பரதேவதாம் ॥

யானை முகத்தவன், மயூர வாவஹனன் ஆகியோரது தாகம் தணிக்கும் ஸ்தனங்களையுடையவளும், சாரணர் முதலிய தேவி கன்னியர் கேசங்களின் மேல் அணியாகச் செய்யப்பட்ட

திருவடித் தாமரைகளையுடையவளும், காரணேச்வரர் ஐவரின் முதற் காரணமாயும், முதல் மாத்ருதேதையாயும் இருப்பவளும், கணேசப் பெருமானுக்கு ஆனந்தமளிப்பவளுமான பரதேவதையை த்யானிக்கிறேன்.

(7)

पद्मकान्तिपदपाणिपल्लवपयोधराननसरोरुहां
पद्मरागमणिमेखलावलयनीवशोभितनितम्बिनीम् ।
पद्मसंभवसदाशिवान्तमयपञ्चरत्नपदपीठिकां
पद्मिनीं प्रणवरूपिणीं मनसि भावयामि परदेवताम् ॥

பத்மகாந்தி பதபாணி பல்லவ பயோதராநந
ஸரோருஹாம்
பத்மராக மணிமேகலா வலய நீவிசோபித
நிதம்பிநீம் ।
பத்மஸம்பவ ஸதாசிவாந்தமய பஞ்சரத்னபதபீடிகாம்
பத்மினீம் ப்ரணவரூபிணீம் மனஸிபாவயாமி
பரதேவதாம் ॥

தாமரை நிறமொத்த கால், கை, பயோதரம், முகம் இவற்றை கொண்டவளும், பத்மராகக் கல் பதித்த ஒட்டியாணம் சுற்றி அழகான இடைப்பாகங் கொண்டவளும், பிரம்மா முதல் ஸதாசிவர் வரையிலான ஐவர் அடங்கிய பாதபீடம் உடையவளும், லக்ஷ்மியாயும், ஓங்கார ரூபிணியாயும் இருக்கிற பரதேவதையை தியானிக்கிறேன்.

(8)

आगमप्रणवपीठिकाममलवर्णमङ्गलशरीरिणीं
आगमावयवशोभिनीमखिलवेदसारकृतशेखरीम् ।
मूलमन्त्रमुखमण्डलां मुदितनादबिन्दुनवयौवनां
मातृकां त्रिपुरसुन्दरीं मनसि भावयामि परदेवताम् ॥

ஆகம ப்ரணவபீடிகா மமலவர்ண மங்கல சரீரிணீம்
ஆகமாவயவசோபினீ மகில வேதஸாரக்ருத
சேகரீம் ।
மூலமந்த்ர முகமண்டலாம் முதிதநாத பிந்து
நவயௌவநாம்
மாத்ருகாம் த்ரிபுரஸுந்தரீம் மனஸி பாவயாமி
பரதேவதாம் ॥

ஆகமங்களும் பிரணவமும் பீடமாகக் கொண்டவள், சுத்த வர்ணமாலிகையை மங்கல சரீரமாக அமைத்துக் கொண்டவள், ஆகமங்களாகிய அவயவங்களால் அழகாய் இருப்பவள், வேதசாரம் முழுதும் ஆபரணமாகக் கொண்டவள், ஸ்ரீவித்யா மூலமந்த்ரத்தை முகமண்டலமாகவும், நாதபிந்துக்களை புது யௌவனப்பருவமாகவும் கொண்ட த்ரிபுரஸுந்தரீ மாதாவை மனதில் த்யானிக்கிறேன்.

**(9)**

कालिकातिमिरकुन्तलान्तघनभृङ्गमङ्गलविराजिनीं
चूलिकाशिखर मालि कावलयमल्लिकासुरभिसौरभाम् ।
वालिकामधुरगण्डमण्डलमनोहराननसरोरुहां
कालिकामखिलनायिकां मनसि भावयामि परदेवताम् ॥

காலிகா திமிர குந்தலாந்த கன ப்ருங்க மங்கல விராஜிநீம்
சூலிகா சிகரமாலிகா வலயமல்லிகா
ஸுரபிஸௌரபாம் ।
வாலிகா மதுரகண்டமண்டலமனோ
ஹராநநஸரோருஹாம்
காலிகா மகில நாயிகாம் மநஸி பாவயாமி
பரதேவதாம் ॥

அகில உலகத்துக்கும் நாயிகையான காளிபர தேவதையை மனதில் த்யானிக்கிறேன். அவள் மிகக் கரிய கூந்தல் கத்தையுடன் விளங்குகிறாள். தலைக்கு மேல் அலங்காரமாக

வைத்துக் கொள்ளப்பட்ட மல்லிகை, மிகுந்த நறுமணத்தை கூட்டுவிக்கிறது. தாமரை மலரொத்த முகத்தின் வசீகரத்தன்மை, அந்த தேவியின் மிருதுவான கன்னத்துக்கப்பால் மேலும் அதிகரித்துள்ளது.

**(10)**

**नित्यमेव नियमेन जल्पतां**
**भुक्तिमुक्तिफलदामभीष्टदाम् ।**
**शङ्करेण रचितां सदा जपे –**
**न्नामरत्ननवरत्नमालिकाम् ॥**

நித்யமேவ நியமேந ஜல்பதாம்
புக்திமுக்தி பலதாமபீஷ்டதாம்।
சங்கரேண ரசிதாம் ஸதாஜபேத்
நாமரத்ன நவரத்னமாலிகாம்॥

முறைப்படி தினந்தோறும் படிப்பவருக்கு, இவ்வுலக சுகபோகமும், முக்தியும் மற்ற விருப்பங்கள் அனைத்தும் கொடுப்பதும் ஸ்ரீ சங்கரரர் இயற்றியதுமான ஒன்பது பத்யங்களாகிய ரத்னங்களால் ஆக்கிய மாலையை எப்பொழுதும் ஜபிக்க வேண்டும்.

நவரத்னமாலிகை முற்றிற்று

